# அண்ணல் நபி (ஸல்) கற்றுத்தந்த அழகிய துஆக்கள்!

வெளியீடு :

**ஸலாமத் பதிப்பகம்**

புத்தகம் வெளியிடுவோர் & விற்பனையாளர்

95, லிங்கிச் செட்டித் தெரு,

முதல் மாடி, சென்னை–1.

போன் : 044–25211981, 42167320

## அதிக எடையுள்ள இரு கலிமாக்கள்

ஹஜ்ரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிப்பதாவது: ''இரண்டு கலிமாக்கள் (ஓதுவதற்கு) நாவிற்கு மிக இலேசானவையாகவும், அமல்கள் நிறுக்கப்படும் தராசில் மிகக் கனமுடையவையாகவும், ரஹ்மானாகிய அல்லாஹ்வுக்கு மிக நேசமுள்ளவையாகவும் இருக்கின்றன. அவை: ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹீ, ஸுப்ஹானல்லாஹில் அளீம் என்பவையாகும்'' என ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளினார்கள். *(நூல்: புகாரி, முஸ்லிம்)*

## மனக்கவலைக்கு மருந்து

''லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் என்பது தொண்ணூற்றொன்பது நோய்களுக்கு மருந்தாகும். அவற்றில் மிகச் சிறியது மனக்கவலையாகும்'' என ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள்.

''லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் என்ற கலிமாவை அதிகமாகக் கூறுவீராக! ஏனெனில், அது சொர்க்கத்தின் புதையலில் உள்ளதாகும்'' என ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனக்கு அருளினார்கள்.

*(அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி), நூல்: மிஷ்காத்)*

## இருபது இலட்சம் நன்மைகள்!

''லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹூ லாஷரீகலஹூ அஹதன் ஸமதன் லம்யலிது வலம் யூலது வலம்யகுன்(ல்) லஹூ குஃபுவன் அஹது.

சிறப்பு: ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் அறிவிப்பதாவது: எவரொருவர் இந்த கலிமாவை கூறினால் அல்லாஹ், அவருக்கு இருபது இலட்சம் நன்மைகளை எழுதுகிறான் என ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்கள் அருளினார்கள். *நூல்: தர்ஃகீப்*

# பொருளடக்கம்

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

## தூக்கத்திலிருந்து எழுந்தவுடன் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَحْيَانَا بَعْدَ مَا
اَمَاتَنَا وَاِلَيْهِ النُّشُوْرُ،

***அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா***
***ப·த மா அமாத்தனா வஇலைஹின்னுஷூர்***

பொருள்: புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே ! அவனே நாம் மரணித்த [தூங்கிய] பிறகு உயிர்ப்பித்தான். இன்னும் நாம் அவனளவிலேயே செல்லக் கூடியவர்களாக இருக்கிறோம்.

[ஆதாரம்: புகாரி]

## கழிவறையில் நுழையும் போது ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ اَللّٰهُمَّ اِنِّى اَعُوْذُبِكَ مِنَ
الْخُبُثِ وَالْخَبَآئِثِ

***பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம இன்னீ***
***அஊதுபி(க்)க மினல் குபுஸி வல்கபாயிஸி***

பொருள்: அல்லாஹ்வின் பெயரால் [ நுழைகிறேன்] அல்லாஹ்வே ! ஆண்,பெண் ஷைத்தானின் தீங்குகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். [ஆதாரம்: திர்மிதி]

## கழிவறையிலிருந்து வெளியேரும் போது ஓதும் துஆ

غُفْرَانَكَ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَذْهَبَ
عَنِّى الْاَذَاى وَعَافَانِىْ

***உ(F)ப்ரானக அல்ஹம்து லில்லா ஹில்லதீ அத்ஹப அன்னியல் அதா வஆஃபானீ***

பொருள் : அல்லாஹ்வே! நான் உன்னிடத்தில் மன்னிப்பைக் கோருகிறேன். என்னுடைய வயிற்றில் வேதனை செய்யக்கூடிய அசுத்தங்களை வெளியாக்கி என் கஷ்டங்களை நீக்கி சுகத்தைக் கொடுத்த அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்!

(ஆதாரம்: இப்னுமாஜா)

## காலை நேரத்தில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِكَ اَصْبَحْنَا وَبِكَ اَمْسَيْنَا وَبِكَ
نَحْيَا وَبِكَ نَمُوْتُ وَاِلَيْكَ الْمَصِيْرُ ط

***அல்லாஹும்ம பிக அஸ்பஹ்னா வபிக அம்ஸைனா வபிக நஹ்யா வபிக நமூத்து வஇலைக்கல் மஸீர்.***

பொருள் : அல்லாஹ்வே ! உன்னுடைய சக்தியைக் கொண்டு காலை நேரத்தை அடைந்தோம். இன்னும் உன்னுடைய சக்தியைக் கொண்டே மாலை நேரத்தை அடைந்தோம். இன்னும் உன்னுடைய சக்தியைக் கொண்டே ஜீவிக்கிறோம். உன்னுடைய சக்தியைக் கொண்டே மரணமாகிறோம். நாங்கள் உன்னிடமே மீளக் கூடியவர்களாக இருக்கிறோம்.

(ஆதாரம் : இப்னுமாஜா)

## வீட்டிலிருந்து வெளியே செல்லும் போது ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ لَاحَوْلَ وَلَا قُوَّةَ
اِلَّا بِاللّٰهِ

***பிஸ்மில்லாஹி தவக்கல்(த்)து அலல்லாஹி லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹ்.***

பொருள் : அல்லாஹ்வின் திருப்பெயரைக் கொண்டு (புறப்படுகிறேன்) இன்னும் அல்லாஹ்வின் மீதே பொறுப்பு சாட்டினேன். கெடுதியை விட்டு பாதுகாப்பதும், இன்னும் நன்மையை செய்வதற்கு சக்தியைத் தருவதும் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

(ஆதாரம்: அபூதாவூத்)

## பாங்கு சப்தம் கேட்டதும் ஓத வேண்டிய துஆ

اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا
شَرِيْكَ لَهٗ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ
وَرَسُوْلُهٗ رَضِيْتُ بِاللّٰهِ رَبًّا وَّبِمُحَمَّدٍ
رَّسُوْلًا وَّبِالْاِسْلَامِ دِيْنًاؕ

***அஷ்ஹது அன்(ல்)லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீ(க்)கலஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸுலுஹு, ரளீத்து பில்லாஹி ரப்பன்(வ்) வபி முஹம்மதிர் ரஸுலன்வ் வபில் இஸ்லாமி தீனா***

பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. நிச்சயமாக முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனுடைய அடியாரும் அவனுடைய திருத்தூதருமாவார்கள் என்று சாட்சி கூறுகிறேன். அல்லாஹ்வை என் இரட்சகனாகவும், முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை

தூதராகவும் இன்னும் இஸ்லாத்தை தீனாகவும் நான் பொருந்தி (ஏற்று)க் கொண்டேன்.

**பாங்கு முடிந்தவுடன் ஓத வேண்டிய துஆ**

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلٰوةِ
الْقَائِمَةِ اٰتِ سَيِّدَنَا مُحَمَّدَنِ الْوَسِيْلَةَ
وَالْفَضِيْلَةَ وَالدَّرَجَةَ الرَّفِيْعَةَ وَابْعَثْهُ
مَقَامًا مَّحْمُوْدَنِ الَّذِيْ وَعَدْتَّهٗ وَارْزُقْنَا
شَفَاعَتَهٗ يَوْمَ الْقِيٰمَةِ اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ

அல்லாஹும்ம ரப்ப ஹாதிஹித் தஃவதித் தாம்மத்தி வஸ்ஸலாத்தில் காயிமத்தி ஆத்தி ஸைய்யிதனா முஹம்மதனில் வஸீலத்த வல் ஃபளீலத்த வத்தரஜத்தர் ரஃபீஅத்த வப்அஸ்ஹு மகாமன்(ம்)மஹ்மூதனில்லதீ வஅத்தஹூ வர்ஜுக்னா ஷஃபாஅத்தஹூ யவ்மல் கியாமத்தி இன்னக்க லா துக்லிஃபுல் மீஆத்.

பொருள் : யா அல்லாஹ் ! இந்த முழுமையான அழைப்பிற்கும் நிலையான தொழுகைக்கும் சொந்தக்காரனே ! முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு சுவர்க்கத்தில் உயர் பதவியையும், சிறப்பையும் கொடுத்தருள்வாயாக!. மேலும் அவர்களுக்கு நீ வாக்களித்த (மகாமெ மஹ்மூத்) என்னும் புகழுக்குரிய இடத்தில் அவர்களை எழுப்புவாயாக! மேலும் எங்களுக்கு நபி (ஸல்) அவர்களின் சிபாரிசையும் கொடுத்தருள்வாயாக ! நிச்சயமாக நீ வாக்கு மீறமாட்டாய்.



(ஆதாரம் : பைஹகீ)

**பள்ளிவாசலுக்குள் நுழையும்போது ஓதும் துஆ**

اَللّٰهُمَّ افْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ

***அல்லாஹும்மஃப்த்தஹ்லீ அ(B)ப்வா(B)ப ரஹ்மத்திக***

பொருள்: அல்லாஹ்வே ! உன்னுடைய அருள் வாசல்களை எனக்கு திறந்து கொடுப்பாயாக !

ஆதாரம் : முஸ்லிம்

**பள்ளி வாசலிலிருந்து வெளியேறும் போது ஓதும் துஆ**

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ مِنْ فَضْلِكَ

***அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக மின்(F)பள்லிக***

பொருள் : அல்லாஹ்வே ! நிச்சயமாக நான் உன்னுடைய பாக்கியத்தை வேண்டியவனாக வெளியேறுகிறேன்.

ஆதாரம் : முஸ்லிம்

**ஒளு செய்ய ஆரம்பிக்கும் பொழுது ஓதும் துஆ!**

بِسْمِ اللّٰهِ الْعَظِيْمِ وَالْحَمْدُ لِلّٰهِ عَلٰى دِيْنِ الْاِسْلَامِ

***பிஸ்மில்லாஹில் அளீமி வல்ஹம்து லில்லாஹி அலா தீனில் இஸ்லாம்.***

பொருள் : மகத்தான அல்லாஹு தஆலாவுடைய திருப்பெயரைக் கொண்டு ஆரம்பிக்கிறேன். இன்னும் (இப்புகழ்)தீனுல் இஸ்லாத்தின் மீது சகல புகழுரைகளும் அல்லாஹ்வுக்கே உரியது.

## ஒளு செய்து கொண்டிருக்கும் போது இடையிடையே ஓதும் துஆ

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ ذَنْبِيْ وَوَسِّعْ لِيْ فِيْ دَارِيْ
وَبَارِكْ لِيْ فِيْ رِزْقِيْ

***அல்லாஹும்மஃபிர்லீ தன்பீ வ வஸ்ஸிஃலீ ஃபீ தாரீ வபாரிக்லீ ஃபீ ரிஜ்கீ***

பொருள்: அல்லாஹ்வே! என்னுடைய பாவத்தை மன்னிப்பாயாக! என் (கப்ருடைய) வீட்டை விசாலமாக்கி வைப்பாயாக! இன்னும் என்னுடைய உணவில் அபிவிருத்தியைத் தருவாயாக!

(ஆதாரம்: திர்மிதி)

## ஒளு செய்து முடித்த பின் ஓதும் துஆ

اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ
لَهٗ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ وَرَسُوْلُهٗ
اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنَ التَّوَّابِيْنَ وَاجْعَلْنِيْ
مِنَ الْمُتَطَهِّرِيْنَ وَاجْعَلْنِيْ مِنْ
عِبَادِكَ الصَّالِحِيْنَ

***அஷ்ஹது அன்(ல்)லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு***

***அல்லாஹும்மஜ்அல்னீ மினத்தவ்வாபீன வஜ்அல்னீ மினல் முத தஹ்ஹிரீன வஜ்அல்னீ மின் இபாதிக்கஸ்ஸாலிஹீன்.***

பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யானவர் யாருமில்லை என்று நான் உறுதிமொழிகிறேன். இன்னும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனுடைய அடியாரென்றும் அவனுடைய தூதரென்றும் நான் உறுதியாக நம்புகிறேன். அல்லாஹ்வே! பாவமீட்சி பெற்றவர்களில் என்னை நீ ஆக்குவாயாக! தூய்மை பெற்றவர்களில் ஒருவனாகவும், உன்னுடைய நல்லடியார்களில் ஒருவனாகவும், "என்னை நீ ஆக்கி" அருள்வாயாக!

(ஆதாரம் : திர்மிதீ)

### வீட்டிற்குள் நுழையும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اِنِّىٓ اَسْئَلُكَ خَيْرَ الْمَوْلَجِ وَخَيْرَ الْمَخْرَجِ
بِسْمِ اللّٰهِ وَلَجْنَا وَعَلَى اللّٰهِ رَبِّنَا تَوَكَّلْنَا

***அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்க கைரல் மவ்லஜி வகைரல் மக்ரஜி பிஸ்மில்லாஹி வலஜ்னா பிஸ்மில்லாஹி கரஜ்னா வ அலல்லாஹி ரப்பனா தவக்கல்னா***

பொருள் : அல்லாஹ்வே ! நல்ல நுழைதலையும் இன்னும் நல்ல வெளியேறுதலையும் நிச்சயமாக உன்னிடத்தில் நான் வேண்டுகிறேன். அல்லாஹ்வின் திருப்பெயரைக் கொண்டு நுழைந்தோம். மேலும் அல்லாஹ்வின் திருப்பெயரைக் கொண்டு வெளியேறினோம். இன்னும் எங்களின் இரட்சகனான அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்தோம். ஆதாரம் : அபூதாவூது

## கடைத்தெருவில் நுழையும் போது ஓதும் துஆ

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ
الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ يُحْيِيْ وَيُمِيْتُ وَهُوَ حَيٌّ
لَا يَمُوْتُ بِيَدِهِ الْخَيْرُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

***லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீத்து வஹுவ ஹையுன்(ல்)லாயமூத்து பியதிஹில் கைரு வஹுவ அலா குல்லி ஷைஇன்கதீர்***

பொருள் : அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்கு தகுதியானவன் வேறு யாருமில்லை. அவன் தனித்தவன், அவனுக்கு இணையானவர் யாருமில்லை. அவனுக்கே அரசாட்சி உரியது. சகல புகழுரைகளும் அவனுக்கேயுரியது. உயிர் கொடுப்பவனும் இறக்கச் செய்பவனும் அவனே. அவன் உயிர் உள்ளவன். மரணம் அவனை அணுகாது. நற்காரியங்கள் யாவும் அவன் கையிலே உள்ளன. படைப்பினங்கள் அனைத்தும் அவன் ஆதிக்கத்தின் கீழ் உள்ளவையாகும்.

(ஆதாரம் : திர்மிதீ)

## சாப்பிட ஆரம்பிக்கும்பொழுது ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ وَعَلٰى بَرَكَةِ اللّٰهِ

***பிஸ்மில்லாஹி வஅலா பர(க்)க(த்)தில்லாஹி***

பொருள் : அல்லாஹ்வுடைய திருப்பெயரைக் கொண்டும், அவனுடைய பரக்கத்தைக் கொண்டும் (உண்கிறேன்).



(ஆதாரம் : புகாரி)

## பிஸ்மில்லாஹ்வை கூற மறந்துவிட்டால்

بِسْمِ اللهِ اَوَّلَهُ وَاٰخِرَهُ

*பிஸ்மில்லாஹி அவ்வலஹு வஆகிரஹு*

பொருள் : அல்லாஹ்வின் திருப்பெயரை இதன் ஆரம்பத்திலும், முடிவிலும் கூறுகிறேன்.

ஆதாரம் : அபூதாவூது

## சாப்பிட்டு முடிந்தபின் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَطْعَمَنَا وَسَقَانَا
وَجَعَلَنَا مِنَ الْمُسْلِمِيْنَ

*அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனா வஸகானா*
*வஜஅலனா மினல் முஸ்லிமீன்*

பொருள் : எங்களுக்கு உணவையும், குடிக்க பானங்களையும் கொடுத்து மேலும், எங்களை முஸ்லிம்களாக ஆக்கிவைத்த அல்லாஹ்வுக்கே சர்வப்புகழும் உரித்தானது.

(ஆதாரம் : திர்மிதீ)

## பிறர் வீட்டில் சாப்பிட்டால் ஓதும் துஆ

اَللّٰهُمَّ اَطْعِمْ مَنْ اَطْعَمَنِىْ وَاسْقِ مَنْ
سَقَانِىْ

***அல்லாஹும்ம அத்இம் மன் அத்அமனீ வஸ்கி மன் ஸகானீ***

பொருள் : யா அல்லாஹ் ! எனக்கு உணவளித்தவருக்கு நீ உணவளிப்பாயாக ! எனக்கு தாகம் தீர்த்து வைத்தவருக்கு தாகம் தீர வைப்பாயாக !

(ஆதாரம் : அஹ்மது)

## உணவளித்தவருக்காக ஓதும் துஆ

اَللّٰهُمَّ بَارِكْ لَهُمْ فِيْمَا رَزَقْتَهُمْ وَاغْفِرْ لَهُمْ وَارْحَمْهُمْ

***அல்லாஹும்ம பாரிக் லஹும் ஃபீமா ரஜக்தஹும் வஃபிர்லஹும் வர்ஹம்ஹும்.***

பொருள் : அல்லாஹ்வே ! இவர்களுக்கு நீ அளித்தவற்றில் (உணவில்) பரக்கத்தை அளிப்பாயாக. இன்னும் இவர்களை மன்னித்து இவர்களுக்கு கிருபை செய்வாயாக.

(ஆதாரம் : முஸ்லிம்)

## பயணமாகக் கூடியவருக்காக ஓதும் துஆ

اَسْتَوْدِعُ اللّٰهَ دِيْنَكَ وَاَمَانَتَكَ
وَخَوَاتِيْمَ عَمَلِكَ

***அஸ்தவ்திஉல்லாஹ தீனக வஅமான(த்)த(க்)க வகவா(த்)தீம அமலி(க்)க***

பொருள் : நான் உன்னுடைய மார்க்கத்தையும், உன்னிடமுள்ள அமானத்துக்களையும், உன்னுடைய காரியங்களின் முடிவையும் அல்லாஹு தஆலாவுடைய பொறுப்பில் ஒப்படைக்கிறேன்.

(ஆதாரம் : திர்மிதி)

## பயணமானவுடன் அப்பயணிக்காக ஓதும் துஆ

زَوَّدَكَ اللّٰهُ التَّقْوٰى وَغَفَرَلَكَ ذَنْبَكَ
وَيَسَّرَلَكَ الْخَيْرَ حَيْثُ كُنْتَ

***ஜவ்வத கல்லாஹுத் தக்வா வஃ(F)பரலக தன்பக வயஸ்ஸர லகல் கைர ஹைஸு குன்த்த***

பொருள் : (அல்லாஹ்வுக்கு) வழிபடுவதை உன்னுடைய பயணப் பொருள்களாக அல்லாஹ் ஆக்குவானாக! உன்னுடைய பாவத்தை மன்னிப்பானாக. இன்னும் நீ எங்கு சென்றாலும் அங்கு உனக்கு நல்லவற்றை இலகுவாக்குவானாக !

(ஆதாரம் : திர்மிதி)

## பயணத்தை தொடங்கும் பொழுது ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِكَ اَصُوْلُ وَبِكَ اَحُوْلُ وَبِكَ اَسِيْرُ

***அல்லாஹும்ம பிக அஸூலு, வபிக அஹூலு, வபிக அஸீரு***

பொருள்: அல்லாஹ்வே ! உன்னுடைய உதவியைக் கொண்டு பயணத்தை தொடங்குகிறேன். இன்னும் உன்னுடைய உதவியைக் கொண்டே வீடு திரும்புவேன். மேலும் உன் உதவியைக் கொண்டே பயணம் செய்கிறேன்.

(ஆதாரம் : அஹ்மது)

பிறகு கீழ்க்கண்ட துஆவை ஓதவும்.

اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ فِىْ سَفَرِنَا هٰذَا الْبِرَّ
وَالتَّقْوٰى وَمِنَ الْعَمَلِ مَا تَرْضٰى اَللّٰهُمَّ
هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هٰذَا وَاطْوِلَنَا بُعْدَهٗ
اَللّٰهُمَّ اَنْتَ الصَّاحِبُ فِى السَّفَرِ وَالْخَلِيْفَةُ
فِى الْاَهْلِ اَللّٰهُمَّ اِنِّىْ اَعُوْذُبِكَ مِنْ وَعْثَاءِ
السَّفَرِ وَكَاٰبَةِ الْمَنْظَرِ وَسُوْءِ الْمُنْقَلَبِ
فِى الْمَالِ وَالْاَهْلِ وَالْحَوْرِ بَعْدَ الْكَوْرِ
وَدَعْوَةِ الْمَظْلُوْمِ

யா அல்லாஹ் ! நான் இந்த பிரயாணத்தில் நன்மையான காரியங்களையும், அல்லாஹ்வுக்கு வழிப்படுதலையும் கோருகிறேன். மேலும், அதனால் பொருந்திக் கொள்ளக்கூடிய அமல்களைச் செய்ய உன்னிடத்தில் வேண்டுகிறேன் ! இறைவனே ! எங்களுடைய பயணத்தை நீ கலபமாக்கி வைத்து எங்களுக்கு அதன் அதிக தூரத்தை சுருக்கித் தருவாயாக! யா அல்லாஹ் ! நீயே எங்கள் பயணத்தில் உடன் இருப்பவன். மேலும், எங்களுடைய வீடு வாசல்களையும் காப்பாற்றக் கூடியவனும் நீயே! யா அல்லாஹ் ! பிரயாணத்தில் ஏற்படும் கஷ்டங்களை விட்டும், தீய பார்வைகளை விட்டும், பயணத்திலிருந்து திரும்பிய பின் எங்களின் பொருள்களிலும், குடும்பத்தினர்களிலும்

நஷ்டத்தைப் பார்ப்பதை விட்டும், காரியம் கை கூடியும் அதில் கெடுதிகள் சம்பவிப்பதை விட்டும், அநீதம் இழைக்கப்பட்டவனின் சாபத்தை விட்டும் உன்னிடத்தில் காவல் தேடுகிறேன்.

**பஸ், இரயில் நிலையங்களில் ஓதும் துஆ**

أَعُوذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ كُلِّهَا
مِنْ شَرِّ مَا خَلَقَ

***அஊது பிகலிமாத்தில்லாஹித் தாம்மாத்தி குல்லிஹா மின் ஷர்ரி மாகலக்***

பொருள்: முழுமையான அல்லாஹுதஆலாவின் வார்த்தைகளைக் கொண்டு அவன் படைத்த அனைத்தின் தீங்கை விட்டும் அவனிடமே பாதுகாவல் தேடுகிறேன்.

**(ஆதாரம் : முஸ்லிம்)**

**வாகனத்தில் ஏறி அமர்ந்ததும் ஓதும் துஆ**

سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هٰذَا وَمَا كُنَّا
لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَىٰ رَبِّنَا لَمُنْقَلِبُونَ

***சுப்ஹானல்லதீ சக்கரலனா ஹாதா வமா குன்னா லஹு முக்ரினீன். வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன்.***

பொருள் : எங்களின் சக்தியால் வசப்படுத்திக் கொள்ள முடியாத வாகனத்தை, வசப்படுத்தி தந்த அல்லாஹ்வை துதி செய்கிறோம்.

பிறகு 'அல்ஹம்துலில்லாஹ்' மூன்று தடவை 'அல்லாஹு அக்பர்' மூன்று தடவை ஓதவும். பிறகு கீழ்க்கண்ட துஆவை ஓதவும்.

سُبْحَانَكَ اِنِّىْ ظَلَمْتُ نَفْسِىْ فَاغْفِرْلِىْ
فَاِنَّهٗ لَا يَغْفِرُ الذُّنُوْبَ اِلَّا اَنْتَ

***ஸுப்ஹான(க்)க இன்னீ ளலம்த்து நFப்ஸீ Fப(ங்)Fபிர்லீ Fபஇன்னஹு லாய(ங்)Fபிருத் துனூப இல்லா அன்த்த***

பொருள் : அல்லாஹ்வே ! எனக்கு நானே தீங்கிழைத்துக் கொண்டேன். எனவே. என்னை மன்னிப்பாயாக! பாவங்களை மன்னிப்பவன். உன்னைத் தவிர (வேறு) யாருமில்லை.

## கடலில் பயணமாகும் போது ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ مَجْرٖيهَا وَمُرْسَاهَا اِنَّ رَبِّىْ
لَغَفُوْرٌ رَّحِيْمٌ وَمَا قَدَرُوا اللّٰهَ حَقَّ
قَدْرِهٖ وَالْاَرْضُ جَمِيْعًا قَبْضَتُهٗ يَوْمَ
الْقِيٰمَةِ وَالسَّمٰوٰتُ مَطْوِيّٰتٌۢ بِيَمِيْنِهٖ
سُبْحَانَهٗ وَتَعَالٰى عَمَّا يُشْرِكُوْنَ

***பிஸ்மில்லாஹி மஜ்ரேஹா வமுர்ஸாஹா இன்ன ர(B)ப்பீ லகு(F)பூருர் ரஹீம். வமா கதருல்லாஹ ஹக்க கத்ரிஹி வல் அர்ளு ஜமீஅன் கப்ள(த்)துஹு யவ்மல் கியாம(த்)தி வஸ்ஸமாவாத்து மத்விய்யாத்துன்(ம்) பியமீனிஹீ ஸுப்ஹானஹு வதஆலா அம்மா யுஷ்ரி(க்)கூன்.***

பொருள் : அல்லாஹ்வுடைய திருப்பெயரைக் கொண்டு இது செல்லக் கூடியதாகவும், சென்று தங்கக்கூடியதாகவும் அமைந்திருக்கிறது. நிச்சயமாக என்னுடைய இரட்சகன் மன்னிப்பவனாகவும், அருள் பாலிப்பவனாகவும் இருக்கிறான். மனிதர்கள் அல்லாஹு தஆலாவை அறிய வேண்டிய கடமைப்படி அறியவில்லை. எனினும் கியாமத் நாளன்று பூமி அனைத்தையும் அவன் தன் கைவசம் வைத்திருப்பான். வானங்களை தன் வலக்கரத்தில் சுருட்டி வைத்திருப்பான். இணை வைப்பதை விட்டும் அல்லாஹு தஆலா மிகவும் பரிசுத்தமானவன்.

**செல்லக்கூடிய ஊரின் தென்படும் சமயம் ஓதும் துஆ**

اَللّٰهُمَّ رَبَّ السَّمٰوٰتِ السَّبْعِ وَمَا اَظْلَلْنَ
وَرَبَّ الْاَرَضِيْنَ السَّبْعِ وَمَا اَقْلَلْنَ وَرَبَّ
الشَّيَاطِيْنِ وَمَا اَضْلَلْنَ وَرَبَّ الرِّيَاحِ
وَمَا ذَرَيْنَ فَاِنَّا نَسْئَلُكَ خَيْرَ هٰذِهِ الْقَرْيَةِ
وَخَيْرَ اَهْلِهَا وَنَعُوْذُبِكَ مِنْ شَرِّهَا وَشَرِّ
اَهْلِهَا وَشَرِّ مَا فِيْهَا ط

*அல்லாஹும்ம ரப்பஸ் ஸமாவாத்திஸ்ஸப்இ வமா அள்லல்ன வரப்பல் அர்ளினஸ்ஸப்இ வமா அக்லல்ன வரப்பஷ் ஷயாத்தீனி வமா அள்லல்ன வரப்பர்ரியாஹி வமாதரைன ஃபஇன்னா நஸ்அலு(க்)க கைர ஹாதிஹில் கர்ய(த்)தி வகைர அஹ்லிஹா வநஊது பி(க்)க மின்ஷர்ரிஹா வஷர்ரி அஹ்லிஹா வஷர்ரி மாஃபீஹா.*

பொருள் : அல்லாஹ்வே ! ஏழு வானங்களுடைய அவை நிழலிட்டுக் கொண்டிருக்கின்ற பொருட்களுடைய இரட்சகனே! ஏழு பூமிகள் அவை சுமந்து கொண்டிருக்கின்ற பொருட்களுடைய இரட்சகனே ! ஷைத்தானின் இன்னும் அவன் வழி கெடுப்பவற்றுடைய இரட்சகனே ! இன்னும் காற்று, காற்று பறக்க வைக்கின்ற சகல வஸ்துக்களுக்கும் இரட்சகனே! நாங்கள் இந்த ஊரின் நலவையும், இன்னும் இங்குள்ளவர்களின் நலவையும் உன்னிடம் வேண்டுகிறோம். இன்னும் இவ்வூரின் தீங்கை விட்டும் இங்குள்ளவர்களின் தீங்கை விட்டும், உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம்.

ஆதாரம் : ஹிஸ்னுல் ஹஸீன்

**வாகனத்திலிருந்து இறங்கும் போது ஓதும் துஆ**

رَبِّ اَنْزِلْنِىْ مُنْزَلًا مُّبَارَكًا وَّاَنْتَ خَيْرُ الْمُنْزِلِيْنَ

*"ரப்பி அன்ஜில்னீ முன்ஜலன்(ம்) முபார(க்)கன்(வ்) வஅன்த்த கைருல் முன்ஜிலீன்"*

பொருள் : இரட்சகனே ! பரக்கத் நிறைந்த இறங்குதலாக (இந்த ஊரில்) என்னை இறக்கி வைப்பாயாக! இன்னும் இறக்கி வைப்பவர்களிலேயே நீ மிகவும் மேலானவன்.

**பயணத்திலிருந்து ஊருக்குள் போகும் போது ஓதும் துஆ**

اَللّٰهُمَّ ارْزُقْنَا جَنَاهَا وَحَبِّبْنَا اِلٰى اَهْلِهَا وَحَبِّبْ صَالِحِىْ اَهْلِهَا اِلَيْنَا

***அல்லாஹும்மர்ஸுக்னா ஜனாஹா வஹ(B)ப்பிப்னா இலா அஹ்லிஹா வஹப்பிப் ஸாலிஹீ அஹ்லிஹா இலைனா***

பொருள்: அல்லாஹ்வே! இவ்வூரிலுள்ள கனி வர்க்கங்களையும், நல்ல பலன்களையும் எங்களுக்களித் தருள்வாயாக! மேலும் இவ்வூரிலுள்ளவர்களின் உள்ளங்களில் எங்கள் மீது அன்பை ஏற்படுத்தி வைப்பாயாக ! இவ்வூரிலுள்ள நல்லோர்களின் மீது எங்கள் உள்ளங்களில் அன்பு உண்டாகும்படி செய்வாயாக !

ஹிஸ்னுல் ஹஸீன்

**மணமக்களை வாழ்த்த ஓதும் துஆ**

بَارَكَ اللّٰهُ لَكَ وَبَارَكَ عَلَيْكُمَا
وَجَمَعَ بَيْنَكُمَا فِىْ خَيْرٍ

***(B)பாரக்கல்லாஹு லக, வ(B)பாரக அலைகுமா வஜமஅ (B) பைனகுமா (F)பீகைர்***

பொருள் : அல்லாஹ் உமக்கு பரக்கத் (அபிவிருத்தி) செய்வானாக ! மேலும் உங்கள் இருவர் மீதும் பரக்கத்தை அருள்வானாக ! மேலும் உங்கள் இருவரையும் நன்மையில் சேர்த்து வைப்பானாக. (ஆதாரம் : அபூதாவூது)

**தாம்பத்தியத்தில் ஈடுபடுமுன் ஓதும் துஆ**

بِسْمِ اللّٰهِ اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيْطٰنَ وَجَنِّبِ
الشَّيْطٰنَ مَا رَزَقْتَنَا

***(B)பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தான மாரஜக்தனா***

பொருள் : அல்லாஹ்வுடைய திருப்பெயரைக் கொண்டு (ஆரம்பிக்கின்றேன்). யா அல்லாஹ்! எங்களை ஷைத்தானுடைய தீங்கை விட்டும் தூரமாக்கி வைப்பாயாக! இன்னும் எங்களுக்கு அளிக்கும் சந்ததிகளையும் ஷைத்தானை விட்டும் தூரமாக்கி வைப்பாயாக ! ஆதாரம் : புகாரீ

**இந்திரியம் வெளியாகும் போது ஓதும்துஆ**

اَللّٰهُمَّ لَا تَجْعَلْ لِلشَّيْطٰنِ فِيْمَا
رَزَقْتَنِىْ نَصِيْبًا

***அல்லாஹும்ம லாதஜ்அல் லிஷ்ஷைத்தானி (F)பீமா ரஜக்தனீ நஸீபா***

பொருள்: அல்லாஹ்வே ! நீ எனக்கு அளித்துள்ள செல்வத்திலிருந்து ஷைத்தானுக்கு விட்டு விடாதே.

**புதிய ஆடை அணியும் பொழுது ஓதும் துஆ**

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ كَسَانِىْ مَا اُوَارِيْ بِهٖ
عَوْرَتِىْ وَاَتَجَمَّلُ بِهٖ فِىْ حَيٰوتِىْ

***அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ மாஉவாரீ பிஹீ அவ்ர(த்)தீ வஅத ஜம்மலு பிஹீ Fபீஹயாத்தீ.***

பொருள் : எல்லாப் புகழு அல்லாஹ்வுக்கே! அவனே என்னுடைய மானத்தை மறைக்கும்படியான உடையை அளித்தான். அதைக் கொண்டு என்னுடைய வாழ்க்கையை அலங்கரித்துக் கொள்கிறேன். (ஆதாரம் : திர்மிதி)

## கண்ணாடியில் முகம் பார்க்கும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اَنْتَ حَسَّنْتَ خَلْقِىْ فَحَسِّنْ خُلُقِىْ

*அல்லாஹும்ம அன்த்த ஹஸ்ஸன்த்த கல்கீ (F)பஹஸ்ஸின் குலுகீ*

பொருள் : அல்லாஹ்வே! நீ என் தோற்றத்தை அழகாக்கியது போன்று என் குணங்களையும் அழகு படுத்துவாயாக!

ஆதாரம் : அஹ்மது

## தலைப்பிறையைக் கண்டதும் ஓதும் துஆ

اَللّٰهُمَّ اَهِلَّهُ عَلَيْنَا بِالْيُمْنِ وَالْاِيْمَانِ
وَالسَّلَامَةِ وَالْاِسْلَامِ وَالتَّوْفِيْقِ لِمَا
تُحِبُّ وَتَرْضٰى رَبِّىْ وَرَبُّكَ اللّٰهُ

*அல்லாஹும்ம அஹில்லஹு அலைனா (B)பில்யும்னி வல்ஈமானி வஸ்ஸலாம(த்)தி வல்இஸ்லாமி வத்தவ்(F)பீகி லிமா துஹிப்பு வதர்ளா ர(B)ப்பீ வர(B)ப்புகல்லாஹ்*

பொருள் : அல்லாஹ்வே! இப்பிறையை நீ விரும்புகின்ற பொருந்திக் கொள்கிற விதத்தில் பரக்கத், ஈமான், நிம்மதி, இஸ்லாம், நல்லுதவி ஆகியவற்றைக் கொண்டு எங்களின் மீது உதயமாக்கச் செய்வாயாக! (பிறையே) என் இறைவனும், உன்னுடைய இறைவனும் அல்லாஹ்வே ஆவான்.

ஆதாரம் : திர்மிதி

## மாலை நேரத்தில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِكَ اَمْسَيْنَا وَبِكَ اَصْبَحْنَا وَبِكَ نَحْيَا وَبِكَ نَمُوْتُ وَاِلَيْكَ النُّشُوْرُ

*அல்லாஹும்ம(B)பிக அம்ஸைனா வபிக அஸ்பஹ்னா வபிக நஹ்யா வபிக நமூத்து வ இலைக்கன்னுஷுர்.*

பொருள்: அல்லாஹ்வே ! உன்னுடைய அருளைக் கொண்டு நாங்கள் மாலைப் பொழுதை அடைந்தோம். இன்னும் உன்னுடைய அருளைக் கொண்டு காலைப்பொழுதை அடைந்தோம். இன்னும் உன்னுடைய அருளைக் கொண்டு உயிர் வாழ்கிறோம். இன்னும் உன்னுடைய அருளைக் கொண்டு மரணிக்கிறோம். இன்னும் உன் அளவிலேயே நாங்கள் மீளக்கூடியவர்களாக இருக்கிறோம்.

(ஆதாரம் : திர்மிதி)

## தூங்கும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِاسْمِكَ اَمُوْتُ وَاَحْيٰ

*அல்லாஹும்ம (B)பிஸ்மிக அமூத்து வஅஹ்யா.*

பொருள்: அல்லாஹ்வே ! உன் பெயரால் நான் மரணிக்கிறேன் (தூங்குகிறேன்) இன்னும் உன் பெயரால் உயிர் பெறுகிறேன். (விழிக்கிறேன்).

**(ஆதாரம் : புகாரி)**

**நாட்டங்கள் நிறைவேற தொழுகையும், துஆவும் !**

ஒருவருக்கு ஏதேனும் தேவை ஏற்பட்டால் இரண்டு ரகஅத் நபில் தொழுது விட்டு பின்வரும் துஆவை ஓதி தனது தேவையை அல்லாஹ்விடத்தில் கேட்கவும் !

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ الْحَلِيمُ الْكَرِيمُ سُبْحَانَ اللّٰهِ رَبِّ الْعَرْشِ الْعَظِيمِ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِينَ أَسْئَلُكَ مُوجِبَاتِ رَحْمَتِكَ وَعَزَائِمَ مَغْفِرَتِكَ وَالْغَنِيمَةَ مِنْ كُلِّ بِرٍّ وَّالسَّلَامَةَ مِنْ كُلِّ إِثْمٍ لَا تَدَعْ لِي ذَنْبًا إِلَّا غَفَرْتَهُ وَلَا هَمًّا إِلَّا فَرَّجْتَهُ وَلَا حَاجَةً هِيَ لَكَ رِضًا إِلَّا قَضَيْتَهَا يَا أَرْحَمَ الرَّاحِمِينَ

***லாஇலாஹ இல்லல்லாஹுல் ஹலீமுல் கரீம். ஸுப்ஹானல்லாஹி ர(B)ப்பில் அர்ஷில் அளீம். வல்ஹம்து லில்லாஹி ர(B)ப்பில் ஆலமீன். அஸ்அலுக மூஜிபாத்தி ரஹ்மத்திக்க வஅஜாயிம மங்ஃபிரத்திக வல் கனீமத்த மின் குல்லி (B) பிர்ரிவ் வஸ்ஸலாமத மின்குல்லி இஸ்மின் லா ததஃலீ தன்பன் இல்லா க(F)பர்த்தஹு வலா ஹம்மன் இல்லா (F)பர்ரஜ்த்தஹு வலா ஹாஜத்தன் ஹிய லக ரிளன் இல்லா களைத்தஹா யா அர்ஹமர் ராஹிமீன்.***

பொருள் : கண்ணியம் பொருந்திய பொறுமையாளனான அல்லாஹ்வை தவிர வணக்கத்திற்கு தகுதியுள்ளவன் வேறு யாருமில்லை. மகத்துவமுள்ள அர்ஷுடைய அல்லாஹ்வை தூய்மையாக்குகிறேன். மேலும், உலக இரட்சகனான அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும் உரியன. யா அல்லாஹ்!

உன்னுடைய அருளுக்குரியவனாக என்னை ஆக்கி வை. மேலும், நீ என்னை மன்னித்து விடுவாய் என்று உறுதியான நம்பிக்கையையும், நன்மையான செயல் செய்வதில் முந்திக் கொள்ளும் தன்மையையும், தீய செயல்களை விட்டு தப்பித்துக் கொள்ளும் தன்மையையும், உன்னிடத்தில் கோருகிறேன். யா அல்லாஹ்! நான் செய்த பாவங்களில் ஒன்றையும் மன்னிக்காமல் விட்டுவிடாதே! மேலும், மன சஞ்சலங்களை நீக்காமல் விட்டு விடாதே! உனது விருப்பத்திற்கேற்ப எனது தேவைகளை பரிபூரணமாக்கி தருவாயாக! அன்புடையோனுக்கு எல்லாம் அன்புடையோனே! ஆதாரம் : திர்மிதி

### துஆயே இஸ்திகாரா

ஒரு காரியத்தை செய்யலாமா, வேண்டாமா என்ற குழப்பம் ஏற்பட்டால் இரண்டு ரக்அத் நபில் தொழுது விட்டு பின்வரும் துஆவை ஓத வேண்டும். அவ்வாறு ஓதினால் அக்காரியம் நல்லதாக இருந்தால் அதில் அல்லாஹ் நம்மை ஈடுபடுத்துவான். அது கெட்டதாக இருந்தால் அதிலிருந்து அல்லாஹ் நம்மை காப்பாற்றி விடுவான். – புகாரி

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْتَخِيْرُكَ بِعِلْمِكَ وَاَسْتَقْدِرُكَ
بِقُدْرَتِكَ وَاَسْئَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيْمِ
فَاِنَّكَ تَقْدِرُ وَلَآ اَقْدِرُ وَتَعْلَمُ وَلَا اَعْلَمُ

وَاَنْتَ عَلَّامُ الْغُيُوْبِ ۝ اَللّٰهُمَّ اِنْ كُنْتَ تَعْلَمُ
اَنَّ هٰذَا الْاَمْرَ خَيْرٌ لِّيْ فِيْ دِيْنِيْ وَمَعَاشِيْ
وَعَاقِبَةِ اَمْرِيْ فَاقْدُرْهُ لِيْ وَيَسِّرْهُ لِيْ ثُمَّ بَارِكْ
لِيْ فِيْهِ وَاِنْ كُنْتَ تَعْلَمُ اَنَّ هٰذَا الْاَمْرَ شَرٌّ
لِّيْ فِيْ دِيْنِيْ وَمَعَاشِيْ وَعَاقِبَةِ اَمْرِيْ
فَاصْرِفْهُ عَنِّيْ وَاصْرِفْنِيْ عَنْهُ وَاقْدُرْ لِيَ
الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ اَرْضِنِيْ بِهٖ

*அல்லாஹு¤ம்ம இன்னீ அஸ்தகீரு(க்)க (B)பி இல்மிக்க வஅஸ்தக்திருக்க (B)பி குத்ரத்திக்க வ அஸ்அலுக்க மின் (F)பள்லிகல் அளீம். F)ப இன்னக்க தக்திரு வலா அக்திரு வ தஃலமு வலா அஃலமு வஅன்த்த அல்லாமுல் ஙு¤யூப். அல்லாஹு¤ம்ம இன்குன்த்த தஃலமு அன்ன ஹாதல் அம்ர கைருல்லீ Fபீ தீனீ வ மஆஷீ வ ஆகிபத்தி அம்ரீ (F)பக்திர்ஹு¤ லீ வயஸ்ஸிர்ஹு¤ லீ சும்ம பாரிக்லீ (F)பீஹி வ இன்குன்த்த தஃலமு அன்ன ஹாதல் அம்ர ஷர்ருல்லீ(F)பீ தீனீ வமஆஷீ வ ஆகிபத்தி அம்ரீ (F)பஸ்ரிஃ (F)ப்ஹு¤ அன்னீ வஸ்ரிஃப்னீ அன்ஹு¤ வக்திர் லியல் கைர ஹைசு கான சும்ம அர்ளினீ பிஹீ.*

**கடன் சுமை நீங்க ஓதும் துஆ**

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنَ الْهَمِّ وَالْحُزْنِ
وَاَعُوْذُبِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ وَاَعُوْذُ
بِكَ مِنَ الْبُخْلِ وَالْجُبْنِ وَاَعُوْذُبِكَ
مِنْ غَلَبَةِ الدَّيْنِ وَقَهْرِ الرِّجَالِ

***அல்லாஹும்ம இன்னீ அஊது (B)பிக மினல் ஹம்மி வல்ஹுஜ்னி வஅஊது பிக மினல் அஜ்ஜி வல் கஸ்லி வஅஊது பி(க்)க மினல் புக்லி வல்ஜுப்னி வஅஊது பி(க்)க மின் ஙலப(த்) தித்தைனி வகஹ்ரிர் ரிஜால்.***

பொருள்: யா அல்லாஹ் ! கோழைத்தனம், கஞ்சத்தனம், ஏற்படுவதை விட்டும் உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். மேலும், முதிர்ந்த வயதை அடைந்து கஷ்டப்படுவதை விட்டும், கடன் மிகைத்து விடுவதை விட்டும், மனிதர்களின் அடக்கு முறையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

ஆதாரம் : அபூதாவூது

**கப்ருஸ்தான் பக்கம் போகும் போது ஓதும் துஆ**

اَلسَّلَامُ عَلَيْكُمْ يَا اَهْلَ الْقُبُوْرِ يَغْفِرُ اللّٰهُ
لَنَا وَلَكُمْ اَنْتُمْ سَلَفُنَا وَنَحْنُ بِالْاَثَرِ

***அஸ்ஸலாமு அலைக்கும் யா அஹ்லல் குபூர் யங்(F)பிருல்லாஹுலனா வல(க்)கும் அன்தும் ஸல(F)புனா வநஹ்னு பில் அஸர்***

பொருள் : புதைகுழியிலுள்ளவர்களே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக ! அல்லாஹ் உங்களையும் எங்களையும், மன்னிப்பானாக ! நீங்கள் எங்களுக்கு முன் சென்று விட்டீர்கள். நாங்கள் பிறகு வரக்கூடியவர்களாக இருக்கிறோம்.

**கஷ்டத்தில் இருப்பவர்களைக் கண்டால் ஓதும் துஆ**

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ عَافَانِىْ مِمَّا ابْتَلَاكَ بِهٖ
وَفَضَّلَنِىْ عَلٰى كَثِيْرٍ مِّمَّنْ خَلَقَ تَفْضِيْلًا

***அல்ஹம்துலில்லாஹில்லதீ ஆ(F)பானீ மிம்மப்(த்)தலாக பிஹீ வ(F)பள்ளலனீ அலா கஸீரின் மிம்மன் கலக த(F)ப்ளீலா***

பொருள் : புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே ! நீ இருக்கும் நிலையை விட்டும் அவன் என்னைக் காத்துக் கொண்டான். மேலும் தன்னுடைய அநேக சிருஷ்டிகளுக்கும் மத்தியில் அவன் என்னை சிறப்பாக்கி வைத்தான்.

ஆதாரம் : திர்மிதி

## இழப்புகள் ஏற்படும் போது

இழப்புகள் ஏற்படும் போது கீழ்க்காணும் துஆவை ஓதினால் அதைவிடச் சிறந்ததை அல்லாஹ் பரிகாரமாகத் தருவான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ اَللّٰهُمَّ أْجُرْنِيْ فِيْ
مُصِيْبَتِيْ وَاخْلُفْ لِيْ خَيْرًا مِنْهَا

***இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிவூன். அல்லாஹும்ம அஜுர்னீ பீ(F) முஸீப(B)த்தி வ அக்லிப்(F)லீ கைரன் மி மின்ஹா***

பொருள்:

நாங்கள் அல்லாஹ்வுக்கு உரியவர்கள். மேலும் நாங்கள் அவனிடமே திரும்பிச் செல்பவர்கள். யா அல்லாஹ் ! என்னுடைய துன்பத்திற்காக நீ கூலி தருவாயாக ! மேலும் இதை விடச் சிறந்ததை பகரமாகத் தருவாயாக !

–ஆதாரம்: முஸ்லிம்

## பாவமன்னிப்புக் கோரும் தலைமையான துஆ

ஒரு மனிதன் கீழ்காணும் துஆவை பகலில் ஓதிவிட்டு அன்றே மரணித்தால் அவன் சொர்க்கவாசியாவான். இரவில் ஓதிவிட்டு இரவிலேயே மரணித்துவிட்டால் அவனும் சொர்க்கவாசியாவான் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.

اَللّٰهُمَّ اَنْتَ رَبِّيْ لَآاِلٰهَ اِلَّاۤ اَنْتَ خَلَقْتَنِيْ
وَاَنَا عَبْدُكَ وَاَنَا عَلٰى عَهْدِكَ وَوَعْدِكَ
مَااسْتَطَعْتُ اَعُوْذُبِكَ مِنْ شَرِّمَاصَنَعْتُ
اَبُوْءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَاَبُوْءُ لَكَ بِذَنْبِيْ
فَاغْفِرْلِيْ فَاِنَّهٗ لَايَغْفِرُالذُّنُوْبَ اِلَّاۤ اَنْتَ

***அல்லாஹும்ம அன்(த்)த ரப்பி(B) லாயிலாஹ இல்லா அன்(த்)த கலக்(த்)தனீ வஅன அப்(B)துக்க வஅன அலா அஹ்தி(க்)க வவஃதி(க்)க மஸ்ததஃ(த்)து அவூது பி(B)(க்)க மின் ஷர்ரி மா ஸனஃ(த்)து அபூ(B)வு ல(க்)க பி(B)னிஃம(த்) தி(க்)க அலய்ய வஅபூ(B)வு ல(க்)க பி(B)தன் பி(B) ப(F)ங்பி(F)ர்லீ ப(F)இன்னாஹூ லா யங்பி(F)ருத் துனூப(B) இல்லா அன்(த்)த***

பொருள்:

யா அல்லாஹ்! நீயே என் இரட்சகன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை நீ தான் என்னை படைத்தாய். இன்னும் நான் உனது அடிமை. உனது உடன்படிக்கையின்படியும், வாக்குறுதியின்படியும் என்னால் இயன்ற வரை நடப்பேன். நான் செய்த தீமையை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நீ எனக்கு செய்த அருளோடும், நான் செய்த பாவத்தோடும் உன்னிடம் மீள்கிறேன். எனவே என்னை

மன்னிப்பாயாக ! உன்னைத் தவிர மன்னிப்பவன் வேறு யாருமில்லை.

–ஆதாரம் : புகாரி

## இறந்தவருக்காக செய்ய வேண்டிய துஆ

.................................................................. கோடிட்ட இடத்தில் இறந்தவரின் பெயரைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

اَللّٰهُمَّ اغْفِرْ لِ...... وَارْفَعْ دَرَجَتَهُ فِي الْمَهْدِيِّيْنَ
وَاخْلُفْهُ فِيْ عَقِبِهِ فِي الْغَابِرِيْنَ وَاغْفِرْ لَنَا وَلَهُ
يَارَبَّ الْعَالَمِيْنَ وَافْسَحْ لَهُ فِيْ قَبْرِهِ وَنَوِّرْ لَهُ فِيْهِ

***அல்லாஹும்மஃபி(F)ர்லி ................ வர்ப(F)ஃ***
***தரஜ(த்)தஹு பி(F)ல் மஹ்திய்யீன வக்லுப்(F)ஹு***
***பி(F) அகிபி(B)ஹி பி(F)ல் காபிரீன வக்பி(F)ர் லனா வலஹு***
***யாரப்ப(B)ல் ஆலமீன் வப்(F)ஸஹ் லஹு பி(F) கப்(B)ரிஹி***
***வநவ்விர் லஹு பி(F)ஹி.***

பொருள்:

யா அல்லாஹ் ! ................ மன்னிப்பாயாக ! நேர்வழி அடைந்தவர்களுடன் சேர்த்து இவரது அந்தஸ்தை உயர்த்துவாயாக ! இவர் விட்டுச் சென்றவர்களுக்கு நீ பொறுப்பு ஏற்றுக் கொள்வாயாக ! அகிலத்தின் அதிபதியே ! இவரையும், எங்களையும் மன்னிப்பாயாக! இவருடைய மண்ணறையை விசாலமாக்குவாயாக ! அதில் இவருக்கு ஒளியை ஏற்படுத்தி தருவாயாக !

– ஆதாரம் : முஸ்லிம்

## இரு உலகிலும் நல்ல வாழ்க்கையை கேட்பது

رَبَّنَآ اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَّفِى الْاٰخِرَةِ
حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ ۝

***ரBப்Bபனா ஆத்தினா Fபித் துன்யா ஹஸன(த்)தவ், வFபில் ஆகிர(த்)தி ஹஸன(த்)தவ், வ கினா அதாபன்னார்***

பொருள் : எங்களைப் படைத்து பரிபாலிப்பவனே! நீ எங்களுக்கு இம்மையில் நல்ல வாழ்க்கையைத்தருவாயாக! இன்னும் மறுமையிலும் நல்ல வாழ்க்கையைத் தருவாயாக! இன்னும் நீ எங்களை நரகை விட்டும் பாதுகாத்து அருள்வாயாக!

(அல்குர்ஆன் : 2–201)

سُبْحٰنَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ ۝ وَسَلٰمٌ
عَلَى الْمُرْسَلِيْنَ ۝ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ ۝

***சுப்ஹான ரBப்Bபிக ரBப்Bபில் இஜ்ஜத்தி அம்மா யசி(F)பூன். வ ஸலாமுன் அலல் முர்ஸலீன். வல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.***

(இஸ்லாத்தின் விரோதிகளின் தவறான) வர்ணிப்புகளை விட்டும் கண்ணியமிக்க உமது இறைவன் மிகத் தூய்மையானவன். (அல்லாஹ்வினால்) அனுப்பப்பட்ட தூதர்கள் மீதும் சாந்தியும் சமாதானமும் உண்டாகுவதாக! புகழ் அனைத்தும் உலகைப்படைத்து பரிபாலிக்கின்ற அல்லாஹ்வுக்கே உரித்தாகும்.

(அல்குர்ஆன் : 37–180, 181, 182)